


# சிவாஜி

ஞாயிறு வாரப்பதிப்பு

கிராம, சமுதாய நல, கலை, இலக்கியப் பத்திரிகை

SHIVAJI
TAMIL WEEKLY
32nd year
of Publication
16—4—1967


## ஜனாதிபதி பதவிக்கு போட்டி

முதன் முறையாகப் பாரத ஜனாதிபதி பதவிக்குப் பெருத்த அளவில் போட்டி வந்திருக்கிறது. இருபது பேர் போட்டி போடுகிறார்கள் என்பதனால் அப்படிச் சொல்லவில்லை. காங்கிரஸ் ஆதிக்கம் நெக்குவிட்டு நிலைகுலைந்து போகமுடியாது என்று நம்பிக் கொண்டிருந்த நாட்டில் 'யானைக்கால் உதை' என்ற பாரதி கதை போல—காங்கிரஸை வீழ்த்துவதும் பெரிய காரியமில்லை என்ற அளவுக்கு ஜனநாயகம் தெளிவு அடைந்து விட்டது. எனவே இருநூறுபேர் போட்டியிட்டாலும் ஆச்சரியமில்லை. இனி அப்படித்தான் வரும்.

காங்கிரஸ் ஆட்சியிலிருந்தாலும் இல்லாவிட்டாலும் நாட்டின் தலைமைக்குத் தேர்ந்தெடுக்கப்படக் கூடியவர்கள், மக்கள் தலைவரென்று பேர்படைத்த பெருந்தலையாக இருப்பதுதான் கண்ணியமாகவும், உலக அரங்கில் மதிப்புப் பெறுவதாகவும் இருக்கும். ஓய்வு பெறுகின்ற நிலையிலிருக்கும் ஒரு உயர் நீதிபதியைத் தேடிப் பிடித்து அவரைத் தலைவராக்க வேண்டுமென்ற அவசியமும் அவசரமும் வந்துவிடவில்லை. அந்தப் பதவிக்கு வரத் தகுதியுள்ள மக்கள் தலைவர்கள் இன்னும் சிலர் நம்மிடையே உயிர் வாழ்ந்து வருகிறார்கள். காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்தவர்கள் வேண்டாமென்று எதிர்க்கட்சிக்காரர்கள் எண்ணுவதாக இருந்தால் ராஜாஜியை அவர்கள் நாடியிருக்கலாம்.

சுதந்திராக் கட்சியில் மஸானி யார் யார் பெயரையோ சொன்னாரே தவிர ராஜாஜி பெயரைச் சொல்லவில்லை. தி. மு. க. வினர் டாக்டர் ராதாகிருஷ்ணனை பேட்டி கண்டு பதவியில் நீடிக்கும்படி கேட்டுக் கொண்டார்களே யல்லாமல் ஏன் இவர்கள் ராஜாஜி பெயரைச் சொல்லக்கூடாது. அவர் ஒத்துக் கொள்கிறாரா இல்லையா என்பது வேறு விஷயம். வெற்றி பெறுவதும் பெறாததும் கூடப் பேச்சில்லை. அவரைப் பற்றிய பேச்சுக்கூட அடிபடவில்லையே.

நம் நாட்டில் ஜனாதிபதியாக ஒருவரைத் தேர்ந்தெடுப்பது அரசியல் பதவிப்போட்டியாக ஆகிவிடுவது அவ்வளவு நல்லதல்ல வென்பதே நமது கருத்து. பார்க்கப்போனால் இந்தப்பதவிக்கு யாரும் போட்டியிடாமல், பலர் சேர்ந்து தகுதியுள்ள ஒருவரை அணுகி இந்தப் பெரும்பதவியை அலங்கரிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்வதும், அவர் அதை அன்புடன் ஏற்றுக் கொள்வதும் என்ற நடைமுறையே அமுலுக்கு வரவேண்டும்.

அரசியல் சட்டப்படி இந்தப்பதவியும் போட்டியிடக்கூடியதாகவும் தேர்ந்தெடுக்கப்படக் கூடியதாகவும் இருக்கலாம். ஆனால் நாம் அதை ஒரு கண்ணியமிக்க ஒரு இடமாகவே போற்றிவரவேண்டும். உலக அரங்கில் புகழ்பெறக்கூடிய அறிவாளிகள், அனுபவசாலிகள், மக்கள் மத்தியில் பெரும்புகழ் பெற்றுள்ளவர்களுக்கே உரியதாக இருந்து வரவேண்டிய ஒரு மகத்தான ஒரு ஆசனத்தைச் சந்தைக் கடை ஏலம் போன்ற விவகாரமாக்கிவிட நேர்ந்திருப்பது நமது நாட்டின் சிறப்புக்கு ஏற்றதல்ல.

இந்தத் தேர்தலில் எதிர்க்கட்சி சார்பில் நிற்பவர் வெற்றி பெற்றாலும் மத்திய ஆட்சியை நேரிடையாக அது ஒன்றும் பாதிக்கப் போவதில்லை. என்றாலும் மத்திய அமைச்சரவைக்கும் ஜனாதிபதிக்கும் இணக்கமான சூழ்நிலை உருவாகாமல் போய்விடக்கூடிய அபாயம் இருக்கிறது. எதிரிகளின் படையெடுப்பு அபாயமும், உள்நாட்டில் பல கட்சிகளின் மாநில ஆட்சி அமைப்புக்களும் ஏற்பட்டிருக்கும் இந்த சூழ்நிலையில் மத்தியில் உள்ள ஆளுங் கட்சியின் அபேட்சகர் வெற்றி பெறுவதே விரும்பத் தக்கதாகும்.

இந்தத் தேர்தலில் வாக்குகள் எண்ணும் முறையால் தேர்தல் முடிவுகள் என்ன ஆகுமென்று யூகித்துச் சொல்ல முடியாமலும் இருக்கிறது. தவிர கட்சிவிட்டுக் கட்சி மாறுகின்ற மனப்போக்கு உடையவர்கள் காங்கிரஸ் கட்சியில்மட்டும் இல்லை என்றும் சொல்லிவிட இயலாது.

நமது நாட்டுச் சுதந்திர வாழ்வின் போக்கு ஒரு நிலையற்ற சூழ் நிலையை நோக்கித் திரும்பிக் கொண்டிருப்பதைத் தான் கவலையுடன் கவனித்து வர வேண்டியிருக்கிறது.

——

## குடும்ப விமானம்!

உல்லாசமாகக் குடும்பத்தாருடன் பயணம் செய்யவும், பயிற்சி அளிக்கவும், "ஸ்டண்ட்" வேலைகள் செய்யவும் பயன்படக்கூடிய குட்டி விமானம் ஒன்றை ஜெர்மன் நிபுணர்கள் தயாரித்திருக்கிறார்கள். குறுகலான விமானப்பாதையில் சிரமமின்றி இவ்விமானம் ஏறி இறங்கும். நால்வர் அமரக்கூடிய இந்த விமானத்தை பல விமானக் கம்பெனிகள் தங்கள் விமானிகளுக்குப் பயிற்சி அளிப்பதற்காக வாங்க முனைந்துள்ளன. (யூ.பி.எஸ்)

# இந்திய வீரர்கள்

இந்திய விமானப்படையின் 34-வது ஆண்டுவிழாவைக் கொண்டாடுகிறோம். முதலாவது உலகப்போரின்போது வீரத்துடன் செயலாற்றிய இந்திய விமானிகளின் சாதனைகளையும், அதையடுத்து ஸ்கின் கமிட்டி அமைக்கப்பட்டதையும், இறுதியில் இந்திய விமானப்படைச் சட்டம் நிறைவேறியதையும், அதையடுத்து இந்திய விமானப்படை உருவானதையும் இத்தருணத்தில் நினைவு கொள்வது மிகவும் பொருத்தமாகும்.

முதலாவது உலகப்போரில் மிகவும் சிறப்பான சாதனை புரிந்த இந்திய விமானி, காலஞ்சென்ற லெஃப்டெனன்ட் இந்திரா லால் ராய் ஆவார். இவரது மரணத்திற்குப் பிறகு சிறப்புவிமானப் பதக்கம் வழங்கப்பட்டது. 'உறுதியுடனும் வீரத்துடனும் பணிபுரிந்த இந்த அதிகாரி 13 நாட்களில் ஒன்பது எதிரி விமானங்களை வீழ்த்தினர். இந்த அலுவல்களின்போது அவர் மெச்சத்தக்க வீரத்துடனும், தேர்ச்சியுடனும் பணிபுரிந்தார். ஒருதடவை ரோந்து அலுவலில் ஈடுபட்டிருந்தபோது 2 விமானங்களைச் சுட்டு வீழ்த்தினர்', என்று அவருக்கு வழங்கப்பட்ட பாராட்டுப் பத்திரம் கூறுகிறது. இந்திரா லால் ராய் 1892 டிசம்பர் 2-ம் தேதி பிறந்தார். 1911 மே மாதத்தில், லண்டனிலுள்ள கென்ஸிங்டன் செண்ட் பால்ஸ் பள்ளியில்சேர்ந்தார். 1917-ம் ஆண்டு ஜூலை மாதத்தில் இவருக்கு ராணுவத்தில் கமிஷன் அந்தஸ்து வழங்கப்பட்டது.

கமிஷன் அந்தஸ்து பெற்ற 5-வது நாளன்று இந்திரா லால் ராய் வென்டோம் என்ற இடத்தில் ஜூலை 10ம் தேதியன்று அலுவல் ஆலோசனை பெறும் பொருட்டு போய்ச்சேர்ந்தார். மூன்று மாதங்களுக்குப் பிறகு டர்ன்பரியிலுள்ள இராணுவப் பள்ளியில் அவர் சேர்ந்தார். பிறகு அவர் 56-ம் நம்பர் அணியுடன் ஃப்ரான்ஸில் சேவை புரியத் துவங்கினர். 1918 ஜனவரி மாதத்தில் அவர் ஃபாரின்பரோ என்னுமிடத்தில் நியமனம் பெற்ருர். 'டிசம்பர் மாதம் வரை லெஃப்டெனன்ட் ராய் மிகச்சிறப்பாகப் பணியாற்றினர். டிசம்பரில் அவரது விமானம் சுட்டு வீழ்த்தப்பட்டது. காயமுற்று நினைவிழந்திருந்த அவர் காப்பாற்றப்பட்டார்', என்று 1918-ம் ஆண்டு ஜூலை மாதத்தில் லண்டன் டைம்ஸ் பத்திரிகை செய்தி வெளியிட்டது.

லெஃப்டெனன்ட் ராய் எப்போது சுட்டுவீழ்த்தப்பட்டார் என்பதைப் பற்றி கொஞ்சம் குழப்பம் இருக்கிறது. ஏனென்றால் 1918 மார்ச் மாதத்தில் அவரது விமானம் சுட்டுவீழ்த்தப்பட்டதாக மற்றொரு தகவல் தெரிவிக்கிறது. இதுதான் சரியானது என்று தோன்றுகிறது; ஏனென்றால், 1918 மே மாதத்தில் இவர் ஆஸ்பத்திரியில் சேர்க்கப்பட்டதாக அவரது வேலைப்பதிவு புத்தகம் தெரிவிக்கிறது. ஆஸ்பத்திரியிலிருந்து அவர் இங்கிலாந்துக்கு திருப்பி அனுப்பப்பட்டார். மே 21ம் தேதி அவர் உள்நாட்டு நிறுவனத்தில் நியமனம் பெற்ருர். விமானியாக பணியாற்றுவதற்கு அவருக்கு உடல்நிலை தகுதியில்லை என்று கூறிவிட்டார்கள். ஆனல் அவர் பெருமுயற்சிக்குப் பிறகு வைத்தியர்களின் மாற்றி விமானியாக மறுபடியும் சேர்ந்துவிட்டார். 1918 ஜூன் 19-ம் தேதி ஃப்ரான்ஸில் 40-ம் நம்பர் அணியில் அவர் பணியாற்றத் துவங்கினர்.

1918-ம் ஆண்டு அவர் ஃபாரின்பரோவில் இருந்தபோது அந்த காலத்திய விமானங்களின் படங்களை வரைவதில் ஆர்வம் காட்டினர். பல்வேறு ரக விமானங்களின் வரைபடங்கள் அவரது புத்தகத்தில் இருக்கின்றன. 1918-ம் ஆண்டு ஜூலை மாதம் 6-ம் தேதி 5½ மணிக்கு அவர் சுட்டு வீழ்த்திய ஜெர்மன் விமானம் வரைபடமும் இதில் அடங்கியிருக்கிறது.

ஜூலை 22-ம் தேதி இந்த இளம் வீரர் உயிரிழந்தார். அதற்குள்ளாக இவர் 9 ஜெர்மன் விமானங்களை சுட்டு வீழ்த்தியிருந்தார். லெஃப்டெனன்ட் ராயின் கமான்டிங் ஆஃபீஸர், லெஃப்டெனன்ட் ராயின் தாய்க்கு அனுப்பிய கடிதத்தில் கூறுகிருர்: "அவர் எங்களது அணியில் சேர்ந்ததிலிருந்தே பகை விமானங்களைச் சுட்டு வீழ்த்துவது ஒன்றையே தமது வாழ்க்கை லட்சியமாக வைத்துக்கொண்டிருந்தார். தமது தேர்ச்சியாலும் திறமையாலும் மெச்சத்தக்க துணிச்சலாலும் அவர் ஒன்பது பகைவிமானங்களை சுட்டு வீழ்த்தினர். அவர் எங்களுடன் இருந்தபோது மகிழ்ச்சியுடன் இருந்தார். எல்லோரும் அவரைப் பாராட்டினர்கள். அவர் புரிந்த சிறப்புச்சேவைக்கு விருது வழங்கப்படும்."

சிறப்பு விமானப் பதக்கம் அவருக்கு வழங்கப்பட்டது.

பிரிட்டனின் ராயல் விமானப்படையில் இந்தியர்களும் சேரலாம் என்ற முறையை துவக்கியவர் ஹர்தீத் சிங் மல்லிக்: இவர் பிறகு ஃப்ரான்சில் நமது தூதராகவும் இருந்திருக்கிருர். 1894 நவம்பர் 23-ம் தேதி பிறந்த இவர் 1914-ம் ஆண்டு போர் மூண்ட போது ஆக்ஸ்ஃபர்ட் பல்லியால் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்தார். 1915-ம் ஆண்டு பட்டம் பெற்ருர். தமது நண்பர்களெல்லாம் ராணுவத்தில் சேருவதைக் கண்ட இவர் தாமும் சேர வேண்டும் என்று ஆசைப்பட்டார். ஃப்ரெஞ்ச் செஞ்சிலுவைச் சங்கத்துக்கு அன்பளிப்பாக வழங்கப்பட்ட ஆம்புலன்ஸ் வண்டியை ஓட்டிச்செல்வதுதான் இவருக்கு ராணுவத்தில் சேவை செய்வதற்கான ஒரே வாய்ப்பாக இருந்தது. ஃப்ரெஞ்ச் செஞ்சிலுவைச் சங்கத்தில் பணிபுரிந்த ஓராண்டுக் காலத்தில் இவர் போர் என்ருல் என்ன என்பதைத் தெரிந்துகொண்டுவிட்டார். எப்படியாவது ராணுவத்தில் சேர்ந்துவிட வேண்டும் என்று துடித்தார்.

இவரது ஆர்வத்தைக் கண்ட ஃப்ரெஞ்ச் நண்பர்கள் ஃப்ரெஞ்ச் விமானப்படையிலேயே இவரைச் சேர்த்து விடுவதாக வாக்களித்தார்கள். ஆக்ஸ்ஃபர்டில் தமது பழைய ஆசிரியரிடம் ஹர்தீத் சிங் பேச்சோடு பேச்சாக இதைத் தெரிவித்தார். இந்த ஆசிரியருக்கு ராயல் விமானப்படையின் தலைவரான ஜெனரல் ஹென்டர்ஸனை நன்கு தெரியும். இந்தியர் ஒருவரை ஃப்ரெஞ்ச் விமானப்படை சேர்த்துக் கொள்ள முன்வரும்போது ராயல் விமானப்படை இவரை சேர்த்துக் கொள்ளாமலிருப்பது வெட்கப்படவேண்டிய விஷயம் என்று ஜெனரல் ஹென்டர்ஸனுக்கு இவர் எழுதினர். ஹர்தீத் சிங்

[ 7-ம் பக்கம் பார்க்க ]





# அற்புதமான 20 ஆண்டுகள்

இந்திய – சோவியத் உறவுகள் எப்பொழுதும் சிறப்பாகவே இருந்து வந்துள்ளன. இதுவரை இரு நாடுகளிடையே பூசல்களோ, போராட்டமோ எழுந்ததில்லை. இந்திய - சோவியத் உறவுகள் தொன்மையானவை; இடைக்காலத்தில் அவை செழித்து வளரவில்லையானால், அதற்கு 200 ஆண்டுகாலனி ஆட்சியே காரணமாகும்.

மக்களின் தேச விடுதலை இயக்கத்தில் மாபெரும் அக்டோபர் சோஷலிஸப் புரட்சி ஒரு திருப்பு முனையாகும்; அதன் விளைவாகக் காலனி ஆதிக்க அமைப்பில் ஒரு நெருக்கடி ஏற்பட்டது. 1917 அக்டோபரில் ஏற்பட்ட ரஷ்யப் புரட்சியின் விளைவாக, காலனி சாம்ராஜ்யங்கள் நொறுங்கி வீழ்ந்தன; உத்வேகமுள்ள சுதந்திர சக்திகள் சீறி எழுந்தன. ''இந்தியாவைக் கண்டேன்'' என்ற நூலில், ''அக்டோபர் புரட்சி மனித குல முன்னேற்றத்துக்குப் பெரிதும் உதவியது; அது தூண்டிவிட்ட ஜோதியை எவரும் அணைக்க முடியாது. அது ஒரு புதிய உலக நாகரிகத்திற்கு கோலி அடியது'' என்று ஜவாஹர்லால் நேரு எழுதியுள்ளார்.

இந்திய மக்கள் தமது விடுதலைப் போராட்டத்தில் வெற்றி பெறுபவர் என்று சோவியத் மக்கள் உறுதியாக நம்பினர். எனவே, இந்தியா சுதந்திரம் பெறுவதற்கு முன்பே இந்திய இடைக்கால அரசின் தலைவரான ஜவாஹர்லால் நேருவின் வேண்டுகோளுக்கு இணங்க சோவியத் யூனியன் இந்தியாவுடன் முதன் முதலில் ராஜதந்திர உறவுபூண்டது. 1947 ஏப்ரல் 13ஆம் நாள் சோவியத் - இந்திய உறவு வரலாற்றில் மிக முக்கியமான நாளாகும். அன்றுதான் தூதரக நிலையில் சோவியத் யூனியனுக்கும் இந்தியாவுக்கும் இடையே நட்புறவு ஒப்பந்தம் ஏற்பட்டது. அன்று முதல் நம்மிரு அண்டை நாடுகளுக்கும், மக்களுக்குமிடையேயுள்ள நட்புறவில் ஒரு புதிய கட்டம் எழுந்தது; அதாவது, அரசாங்கரீதியில் சோவியத - இந்திய உறவுகள் ஏற்பட்டன. ஏப்ரல் 14, 1947 இல் இந்த நட்புறவு ஒப்பந்தம் சோவியத் - இந்தியப் பத்திரிகைகளில் வெளியிடப்பட்டது.

காலனி ஆதிக்க ஒடுக்குமுறையிலிருந்து இந்திய மக்கள் விடுதலை பெற்றதும், இந்திய – சோவியத் ராஜதந்திர உறவுகள் ஏற்பட்டதும் பல்வேறு துறைகளில் சோவியத் இந்திய நட்புறவு வளருவதற்குப் பரந்த வாய்ப்புக்களை அளித்தன. சோவியத் - இந்திய நட்புறவின் தொன்றுதொட்ட வரலாறு எதைக் காட்டுகிறது? பல்வேறு சமுதாய அமைப்புள்ள நாடுகள் சமாதான சகவாழ்வுக்கோட்பாட்டின் அடிப்படையில் பரஸ்பரம் தொடர்புகளையும் ஒத்துழைப்பையும் வளர்த்துக்கொண்டால், சர்வதேச நிலவரத்தை அபிவிருத்தி செய்யவும், சமாதானத்தைப் பாதுகாத்து வலுப்படுத்தவும், காலனி ஆதிக்கத்தை ஒழித்துக் கட்டவும் முடியும்; இதைத்தான் வாழையடி வாழையாக வளர்ந்து வரும் சோவியத்- இந்திய நட்புறவு எடுத்துக் காட்டுகிறது.

ஜவாஹர்லால் நேருவால் உருவாக்கப்பட்டு, சுதந்திர இந்திய அரசால் பிரகடனப் படுத்தப்பட்ட கூட்டுச் சேராமை, சமாதான சகவாழ்வு, காலனி ஆதிக்க எதிர்ப்புப் போராட்டம் ஆகிய கோட்பாடுகள் கடந்த இருபது ஆண்டுகளாகச் சோவியத் யூனியனின் நல்லெண்ணத்தைப் பெற்றுள்ளன. கடந்த இருபது ஆண்டுகளாகச் சோவியத் யூனியனும் இந்தியாவும் பற்பல முக்கியமான சர்வதேசப் பிரச்னைகளில் பயனுள்ள முறையில் ஒத்துழைத்துள்ளன. பற்பல அவசரப்பிரச்னைகளில் இரு நாடுகளும் எடுத்துள்ள நிலையில் ஒருமைப்பாடு உண்டு; எனினும் ஒரு சில கருத்து வேற்றுமையும் உண்டு. ஒட்டுமொத்தமாகப் பார்க்கும்பொழுது, இரு நாடுகளின் அயல் துறைக் கொள்கை நடவடிக்கைகளில் ஒத்துழைப்புத்தான் அதிகம். 1950 இல் கொரியா யுத்தத்தை நிறுத்துவதிலும், இந்தோ சீனப்போருக்கு முடிவு காண்பதிலும், 1954 ஆம் ஆண்டில் இந்தோ–சீனுவபற்றிய ஜெனீவா மாநாட்டைக் கூட்டுவதிலும், 1956 இல் சூயஸ் நெருக்கடியின் போது எகிப்துக்கு எதிரான ஏகாதிபத்திய ஆக்கிரமிப்பை முறியடிப்பதிலும், ஆசிய ஆப்பிரிக்க மக்களின் விடுதலைப் போராட்டத்தையும், இனவெறி எதிர்ப்புப் போராட்டத்தையும் ஐ.நா.வுக்குள்ளும், அதற்கு வெளியிலும் கூட்டாக எதிர்ப்பதிலும், போர்த்துக்கீசிய ஆக்கிரமிப்பை முறியடிப்பதில் இந்தியாவுக்குத் தீவிர ஆதரவு அளிப்பதிலும், சோவியத் ஒத்துழைப்பைக்காணலாம். படைக் குறைப்புப் பிரச்னை, அணு ஆயுதத்தடைப் பிரச்னை, அயல் நாடுகளில் ராணுவ தள ஒழிப்புப் பிரச்னை ஆகியவற்றில் இந்தியா சோவியத் யூனியனுடன் ஒத்துழைத்துள்ளது.

1964-ல் மாஸ்கோ அணு ஆயுதத்தடை உடன்பாட்டில் முதன் முதலாகக் கையெழுத்திட்ட நாடுகளில் இந்தியாவும் ஒன்று. 1965, 1966-ம் ஆண்டுகளில் சோவியத் யூனியனும் இந்தியாவும் வட வியத்நாம் மீது அமெரிக்கா குண்டு வீசக்கூடாதென்றும், ஜெனிவா ஒப்பந்த அடிப்படையிலே வியத்நாம் பிரச்னை தீர்க்கப்படவேண்டுமென்றும் கூட்டாகக் கோரியுள்ளன.

இளம் விடுதலை நாடுகளைத் தீவிரமாக ஆதரிக்கும் சோவியத் யூனியன், அவற்றின் பிரச்னைகளைப் புறக்கணிக்க இயலாது. எனவே 1965-ல் இந்திய பாகிஸ்தான் ராணுவப் பூசலில் தீர்வுகாணச் சோவியத் யூனியன் முயன்றது; 1966 ஜனவரியில் தாஷ்கெண்டில் இந்தியப் பிரதமரும், பாகிஸ்தான் அதிபரும் சந்தித்து உடன்பாடு கண்டனர். சோவியத் யூனியனின் முன்முயற்சியை இந்திய

[ 7-ம் பக்கம் பார்க்க ]





| | | |
|---|---|---|
| ஞ : 32 | ஊன்றிய கொள்கையும் ஒன்றே கணந்தோறும் | 1967 |
| இதழ் : 21 | தோன்றும் கடமைகள் ஆற்றுதல் நன்றே | ஏப்ரல்: 16 |


# ஸ்ரீ மாசிலாமணி முதலியார்

வாலாஜாபாத் இந்துமத பாடசாலை நிறுவிய பேரறிஞரும் பெருந் தொண்டரும் பெரியவருமான வா. தி. மாசிலாமணி முதலியார் தமது 77 வது வயதில் காலமானுர் என்ற செய்தி கேட்டுப் பெரிதும் வருந்துகிறோம்.

காஞ்சியையடுத்து, பாலாற்றங்கரையில் அவரால் தோற்றுவிக்கப்பட்டு மிகச் சிறப்பாக நடைபெற்றுவரும் இந்துமத பாடசாலையும் மாணவர் தங்கியிருந்து வளரும் வள்ளலார் இல்லமும் அனைவராலும் போற்றிப் புகழப் பெற்றுவரும் சிறந்த நிறுவனங்களாகும். தமிழகத்தின் பற்பல மாவட்டங்களிலிருந்தும் ஏழை எளியவர் செல்வர் என்ற பாகுபாடின்றி சுமார் ஆயிரத்துக்குக் குறையாத மாணவர் இங்கு தங்கியிருந்து பயின்று வருகின்றனர்.

தனி மனிதராக நின்று மாபெருங்கல்வி நிறுவனம் தோற்றுவித்து அதை வளர்த்து ஆளாக்கிய இணையற்ற பணி இன்று குன்றின் மேலிட்ட விளக்காகத் திகழ்கிறது. இன்ஷுரன்ஸ் ஏஜண்டாக இருந்து அதில் வரும் வருமானத்தையெல்லாம் இந்தப்பள்ளியின் வளர்ச்சிக்கு அவர் உதவி வந்தார். தமது ஆயுளையும் ஏழு லட்சம் ரூபாய்களுக்கு இன்ஷுர் செய்து அந்தத் தொகையையும் இந்த நிறுவனத்திற்கு உதவியிருக்கிருர்.

இவரது தொண்டின் சிறப்பைப் போற்றிய செல்வர் பலர் ஏராளமான நன்கொடைகளை வாரி வழங்கி இவருடைய முயற்சியைப் பேணிக் காத்துள்ளனர். உண்மையான சேவையை உலகம் போற்றி ஆதரிக்கும் என்பதற்கு இவரது வாழ்வும், இந்தப் பாடசாலையும் சான்ருக விளங்குகின்றன.

தனிமனிதர்கள் முயன்ருல் எத்துணையும் சாதிக்க முடியுமென்பதற்கு இவர்தம் வாழ்க்கை ஓர் எடுத்துக்காட்டாகும்.

தமது முயற்சிகள் நல்ல பயன்தந்து பொன் விழாவும் கண்ட பெருமகிழ்ச்சியுடன் நிறைந்த வாழ்க்கையை முடித்துக்கொண்டு அமரராகிவிட்ட இந்தப் பெரியார் தமிழகத்தின் கல்வித்துறை வரலாற்றில் செயற்கரிய பெருஞ்செயல் புரிந்த பெரியார்.

பொதுக்கல்வியுடன் சமயம், கைத்தொழில் ஆகியவற்றை அளித்ததுடன், வள்ளலார் இல்லத்தின் நடைமுறையில் மாணவர்களுக்கு மிகச்சிறந்த சமூக அறிவியல் வளர்ச்சிக்கும் துணை புரிந்துள்ளார். இவர் தம் ஆன்மா சாந்தியடைவதாக.

—

## பல அடுக்கு இரயில்வே நிலையம்

மேற்கு ஜெர்மனியில் தொழிலியல் நகரமான லுட்விக்ஷாபன் என்னும் நகரில் புதுமையான முறையில் இரயில் நிலையம் ஒன்று கட்ட ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது. பல திசைகளிலிருந்து வருகிற இரயில் வண்டிகள், மேலும் கீழுமாக பல அடுக்குகளில் தண்டவாளங்களில் செல்வதற்கான முறையில் 52.5 கோடி ரூபாய் செலவில் இரயில் நிலையம் கட்டப்படுகிறது. இரயில் நிலையத்திற்கு மேலாக ''தொங்கும் பாலம்'' போல 75 மீட்டர் உயர இரு தூண்களை ஆதாரமாகக் கொண்டு கார்கள் செல்ல சாலையும் அமைக்கப்படுகிறது.

## உடல் பருமன் உயிருக்கு ஆபத்து

சராசரி எடையுடன் கூடிய மனிதர்களைக் காட்டிலும், உடல்பருமன் உள்ளவர்களுக்கு நீரிழிவு நோய், ஆஸ்துமா, மூட்டு வீக்கம் ஆகிய நோய்கள் எளிதில் தொற்றிக் கொள்கின்றன. பித்த நீர்ப்பை, மூத்திரப்பை ஆகியவற்றில் கற்கள் ஏற்படுவதும் இவர்களுக்கே அதிகம். ஜெர்மன் சத்துணவுக் கழகம், இந்த தகவலை வெளியிட்டுள்ளது. முப்பது சதவீத எடை அதிகமுள்ளவர், மூத்திரப்பையில் கல் ஏற்படும் கோளாறு ஆறு மடங்கு அதிகமாகவும், நீரிழிவு ஏற்படுவது மும்மடங்கு அதிகமாகவும் இருக்கிறது. கொழுத்த உடல் கொண்டவர்களுக்கு இரத்த் அழுத்தம் அதிகமாக இருக்கும். இருதயநோயும் ரத்தஓட்ட நோயும் எளிதில் பீடிக்கும். இரத்த அழுத்தம் ஏற்படுகிறது என்ருல், உடலில் வேறு பல நோய்கள் இருக்கின்றன என்று அர்த்தம். உடல் பருமன் கொண்டவர்களைவிட உடல் ஒல்லியாக இருப்பவர்களே அதிக காலத்திற்கு உயிர் வாழ்கிருர்கள். (யூ.பி.எஸ்)

## திடீர் உணவு

உணவுப் பண்டங்களைப் பொடியாக்கி நீண்ட காலத்திற்குப் பாதுகாக்கும் புரட்சிகரமான முறையை மேற்கு ஜெர்மன் விஞ்ஞானி டாக்டர்வில்ஹெல்ம்குரோத் கண்டுபிடித்திருக்கிருர். இவ்வித உணவுப் பண்ட பொடிகளை, குளிர்ந்த நீரிலோ, அல்லது வெந்நீரிலோ கலந்தால் நொடிப் பொழுதில் கரைந்து 'சூப்' ஆகவோ, வேறு உணவுப் பண்டமாகவோ 'சமையல்' ஆகிவிடுகிறது. புதிதாகத் தயாரிக்கப்பட்ட உணவா? அல்லது உணவுப் பொடிகளைக் கொண்டு தயாரிக்கப்பட்ட 'திடீர் உணவா' என்பதை 'நளபாக' சமையல்காரரும் வித்தியாசம் கண்டுபிடிக்க முடியாது. அந்த அளவுக்கு உணவுப் பண்டங்களைப் பொடியாகத் தயாரிக்கும்போது, வைட்டமின் சத்துக்களும், வாசனையும் எவ்விதத்திலும் குறைவதில்லை. இல்லத்தரசிகளுக்கும் ஹோட்டல்காரர்களுக்கும் இம்முறை ஒரு வரப் பிரசாதம் என்றே சொல்லவேண்டும். பழங்கள், காய்கறிகள் ஆகியவற்றை உற்பத்தி செய்யும் நாடுகளில் விளைச்சல் காலத்தில் விலைகள் குறைந்து, பின்னர் விளைச்சல் முடிந்த பின்னர் விலைகள் உயரும். இந்நிலைமையைத் தவிர்க்க, விளைச்சல் காலத்தில் இவற்றை 'குரோத்' முறை மூலம் பக்குவப்படுத்தி வைத்து பின்னர் நியாயமான விலை கிடைக்கும் போது பயன்படுத்தலாம். இதனுல் காய்கறிகள், பழங்கள் இவற்றின் தரம் சிறிதும் கெடுவதே இல்லை.

இம்முறையின்படி உணவுப்பண்ட பொடி தயரிப்பதற்கான தொழிற்சாலைகள் தற்போது, மேற்கு ஜெர்மனியிலும் இத்தாலியிலும் இரு தொழிற்சாலைகள் கட்டப்படுகின்றன.

(யூ. பி. எஸ்.)

ரஷ்ய மொழியில்

# உலக கவிதைத் திரட்டு

கடந்த 100 ஆண்டுகளாக ரஷ்ய மொழி பெயர்ப்பாளர்கள் செய்த பணியின் சுருக்கமே இந்நூல். சென்ற நூற்றாண்டில் ஹோமர், பைரன், ஃபர்தூஸி ஆகியோரின் கவிதைகளை வாஸலி ஜுகோவ்ஸ்கி என்பார் மொழி பெயர்த்தார். அவரது கவிதைகளில் சில இத்திரட்டில் உள்ளன. அயல்நாட்டுக் கவிதைகளை மொழி பெயர்த்தோர் அனைவரும் இதில் இடம்பெற்றுள்ளனர். 85 வயதான கோர்னி சுகோவ்ஸ்கி முதல் தாந்தேயின் காவியத்தைச் சிறப்பாக மொழிபெயர்த்து இத்தாலியில் பரிசு வாங்கிய சோவியத் இளைஞர் யெவ்கெனி சலனேவிச் வரை, இத்திரட்டில் இடம் பெற்றுள்ளனர்.

கவிதைகளை மொழி பெயர்க்கும் சோவியத் எழுத்தாளர்கள் உலக அரங்கில் பெரிதும் பாராட்டப்படுகின்றனர். அன்னா அக்மதோவா, நிக்கோலாய் திக்கனோவ், போரிஸ் பாஸ்டர்நாக், சாமுயில் மர்ஷாக் ஆகியோர் சிறந்த உதாரணம் ஆவார்.

கடந்த 50 ஆண்டுகளில் 105 அயல் மொழிகளிலிருந்து 25,000 நூல்கள் ரஷ்ய மொழியில் ஆக்கப்பட்டுள்ளன; இவை 100 கோடி பிரதிகள் வெளிவந்து உள்ளன. இவற்றுள் பிரெஞ்சு மொழியே முதலிடம் பெறுகிறது; 5,000க்கு மேற்பட்ட பிரெஞ்சு நூல்கள் ரஷ்ய மொழியில் வந்துள்ளன. ஆசிய, ஆப்பிரிக்க, லத்தீன் அமெரிக்க மொழிகளிலிருந்தும் அண்மைக்காலத்தில் ஏராளமான கவிதைகள் மொழி பெயர்க்கப்படுகின்றன.

— டாஸ்

# ஸ்ரீ ராம நவமி விழா

பீஹார் மாகாணத்தைச் சார்ந்த ஜாம்ஷெட்பூரில் உள்ள தென்னிந்தியர்கள் 'மதராஸிஸம் மேளனி' என்று ஒரு ஸ்தாபனத்தை அமைத்து அதன்மூலம் பல நற்பணிகளைச் செய்து வருகின்றனர். அவர்களால் கட்டப்பட்டுள்ள மிக அழகிய ஆடிடோரியத்தில் ஸ்ரீ. ராம நவமி விழா 9—4—67 மாலை ஆரம்பமாகியது. ஸ்ரீ. ராம பூஜைக்குப் பின், தஞ்சை 'ஹரிகதா அமிருத வர்ஷினி' குமாரி வி. மங்களம் கோஷ்டியாரின் ஸ்ரீ. நாச்சியார் வைபவம் ஹரிகதை நடைபெற்றது. ஆரம்பத்தில் சம்மேளனத்தலைவர் ஸ்ரீ. ஸி. ராமசாமி அய்யங்கார், கலைக்குழுவினரை வரவேற்றுப்பேசினார். கதையின் முடிவில் சம்மேளனியின் காரியதரிசி ஸ்ரீ.பி.ஆர்.டி. ராஜன், குமாரி மங்களத்தின் கலைத்திறனைப் போற்றியதுடன் இறையருளால் சிறு வயதிலேயே பக்தி பிரசாரம் செய்யும் பாக்கியம் கிடைத்துள்ளது என்றும் குறிப்பிட்டார். குமாரி மங்களம் குழுவினர் தொடர்ந்து 7 தினங்கள் இங்கு கதை செய்துவிட்டு, சிந்திரி, கல்கத்தாவில் நடைபெறும் ஸ்ரீ. ராம நவமி விழாக்களிலும் ஹரிகதை செய்வார்கள். ஏராளமான ரஸிகர்கள் விழாவில் கலந்துகொண்டு சிறப்பித்தனர்.

# நூதன இயந்திரம்

டச்சு தொழில் ஸ்தாபனமான மெஷின் பாப்ரிக் டிரிட்டர் பலவிதமான ரொட்டிகள், பன்கள் தயாரிக்கும் இயந்திரங்களை தயாரித்துள்ளனர். அதிகமாகத்தயாரிக்கவும் ஏற்றபடி இதை அமைத்துக் கொள்ளலாம். ஒரு மணிக்கு 7000 முதல் 12,000 ரொட்டிகள் வீதம் இதில் தயாரிக்கலாம். இந்த இயந்திரத்தின் நீளம் 267·7 அங்குலம். அகலம் 32·3 அங்குலம். உயரம் 122·1 அங்குலம்.

## இந்திய
# நாடகம் முன்னேறுகிறது

நான் அண்மையில் இந்தியாவில் ஆறுமாதம் சுற்றுப் பயணம் செய்தேன். இந்திய நாடகக்கலை பற்றி என் கருத்துக்களைக் கூற விரும்புகிறேன். குறிப்பாக, இன்றைய இந்திய நாடகங்களை எடுத்துக்கொள்வோம்.

இன்றைய இந்திய நாடக மானது, தனது பழம்பெரும் மரபுடன் தொடர்பு கொண்டது. இன்றைய இந்திய நாடகத்துறைக்குப் பல் வேறு சித்தாந்த கலைப் பிரிவுகளைச் சார்ந்தவர்கள் தலைமை தாங்குகிறார்கள்; அவர்கள் தனித் தன்மை யான வாழ்க்கைக் கண்ணோட்டமும், கலை வேட்கையும் உடையவர்கள்.

இந்திய நாடகக் கலை, பணமுக - தேசிய அம்சம் கொண்டது; பாரதத்தின் பல்வேறு பகுதிகளில், பல விதமாக வளர்ந்துள்ளது. எனினும் அதற்கு ஒரு பொதுப்போக்கு உண்டு. இப்போக்குத்தான் அதன் வாழ்வையும், வளர்ச்சியையும் நிர்ணயிக்கிறது.

'இன்றைய நாடகக் கலையில் எவ்வாறு புது புது வடிவங்களைச் சமைப்பது?' என்பது இந்திய நாடக நிறுவனங்களுக்கு ஒரு பெரும் பிரச்னையாக இருந்து வருகிறது. இன்றைய வாழ்க்கை நிலையின் காரணமாகப் புதிய உள்ளடக்கம் கிடைத்து விட்டது; ஆனால் புதிய உருவத்துக்கு என்ன செய்வது? சம்பு மித்ரா, இப்ராஹிம் அல்காஸி, தருண் ராய் ஆகிய நாடகக் கலைஞர்கள் இதற்கு விடை கண்டு வருகிறார்கள். அவர்கள் தமது திறமைக்கும், வலிமைக்கும் ஏற்ப, நாடகத் துறையில் சோதனை செய்து வருகிறார்கள். ரசிகர்களுடன் எவ்வாறு புதிய முறையில் உறவு கொள்வது என்பதை ஆராய்ந்து வருகிறார்கள்.

இந்திய நாடகக் கலையில் புதுமை வேட்கையும், புதிய போக்குகளும் உள்ளன; ஆனால் அவையெல்லாம் முந்திய மரபுகளையும், அயல் நாட்டு நாடகச் சாதனைகளையும் தழுவியவையாகும்.

இந்திய நாடகத்தின் பற்பல இனங்களிலும் சோதனை நடைபெறுகிறது. இன்று நவீன மேடைகளில் சமஸ்கிருத நாடகங்களும் நடைபெறுகின்றன என்பதை நாம் நினைவில் கொள்ள வேண்டும்.

பண்டை இதிகாச நாயகர்களின் வீரச் செயல்களும் சத்தியத்தையும் நீதியையும் சார்ந்து நிற்கும் சக்திகளின் மாபெரும் தீமை ஒழிப்புப் போராட்டமும், இன்றளவும் இந்திய மக்களைக் கவர்ந்துள்ளன. ஒரு புதிய அரசை நிர்மாணித்துக் கொண்டிருக்கும் மக்களுக்கு வீர இதிகாசக் கதைகளில் பற்று இருப்பது இயற்கையே. புராண நாடகங்களை இந்திய மக்கள் விரும்புகிறார்களென்றால், அதற்குக் காரணமுண்டு. அவை எளிமையாயும், அவர்களின் இதயத்தோடு ஒட்டியும் உள்ளன என்பதோடு, அவற்றிலுள்ள மாபெரும் மனிதாபிமான இலட்சியங்களும், காலத்திற்கு ஏற்ப அமைந்து உள்ளன. இந்தியாவில் புராண நாடகங்கள் மட்டும் அரங்கேறவில்லை; பற்பல துணிச்சலான சமூக நாடகங்களும் நடைபெறுகின்றன. மற்றொரு முக்கிய விஷயம்: பற்பல நூற்றாண்டுகளாக நிலவி வரும் கிராமிய நாடக வடிவங்களும், நவீன உள்ளடக்கம் பெறுகின்றன. இது ஒரு துணிச்சலான முயற்சியாகும்.

பழைய கலை உருவங்களில் புதிய உள்ளடக்கத்தை இணைப்பது அத்தனை எளிதல்ல. காலம், மக்களின் சமுதாய மனப்பான்மை, ஆன்மீக வாழ்வின் தனித் தன்மைகள், கலையிலே புது நோக்கு ஆகியவை, இந்திய நாடக வடிவத்தைப் பாதித்துள்ளன. எனவே, புதிய நாடகக்கலை தோன்றியுள்ளது; உள்ளடக்கத்திலும், வெளியீட்டு முறைகளிலும் இது தேசியத்தன்மை கொண்டது; அதே வேளையில், இன்றைய நாடக ரஸிகர்களின் விருப்பங்களையும் பூர்த்தி செய்கிறது. இத்துறையில் வெற்றிகரமான சாதனைகள் நிகழ்ந்துள்ளன. என்றே நான் கருதுகிறேன்.

இந்தியக் கலைஞர்களின் சோதனை நாடகங்கள், மிகப்பயன் உள்ளவை; நம்பிக்கை தருபவை.

இந்தச் சமயத்தில், ஹபீப் தன்வீரின் "மண் வண்டி" (மிருச்சகடிகம்) மோனிக்கா மிஸ்ராவின் "சகுந்தலா" ஆகிய நாடகங்களைக்குறிப்பிட விரும்புகிறேன். இவ்விரு நாடகங்களும், பழமைக்குப் புது உருக்கொடுப்பனவாகும்; இதிகாச நாடகங்களை இன்றைய நிலையில் விளக்குவனவாகும். 'நவீன வடிவங்களைப் படைப்பதற்கும், நவீனமேடை உத்திகளை அமைப்பதற்கும் பழஞ்செல்வங்களைப் பயன்படுத்தலாமா? என்ற கேள்விக்கு இவை விடையளிக்க முயலுகின்றன.

இன்றைய இந்தியாவில் ஆண்டுதோறும் புதிய சமூக நாடகங்கள் அரங்கேறுகின்றன, இந்திய நாடகக்கலை, புதிய கருப்பொருளையும், புதிய வாழ்வையும் நாடுகிறது. 200 ஆண்டு காலனி ஆட்சியின் சின்னங்களைத் துடைத்தெறிய முயலும் இக்கலை, சிற்சில வெற்றிகளைக் கண்டிருக்கிறது; இந்திய மக்களுக்குச் சிற்சில வெற்றிகளைக் கண்டிருக்கிறது; இந்திய மக்களுக்குச் சிற்சில புதுமைகளை வழங்கி உள்ளது.

நான் சில இந்திய நாடகங்களைக் கண்டேன். உலகை மாற்றியமைக்கும் மனிதனே அவற்றின் கதாநாயகன்; உலகை மாற்றுவதோடு, அவன் ஓரளவு தன்னையும் மாற்றிக் கொள்கிறான். நடிப்பு அம்சத்தில் எதார்த்த பாணி, மேலோங்கி வருகிறது. இது மிகவும் வரவேற்கத்தக்கது.

இந்திய நாடகங்களில் எதார்த்த நடிப்பு வளருவதில் வியப்பில்லை. ஏனெனில், இன்றைய வாழ்வு அதற்கு வழிவகுத்திருக்கிறது. எதார்த்த நடிப்பு இன்றைய இந்திய நாடகத்தின் உயிர் நாடியாகி விட்டது.

இந்திய எதார்த்தநாடாக நடிகர்கள் மாபெரும் வெற்றி பெற்று உள்ளனர். இந்தியாவிலும், அயல் நாடுகளிலும் பிரபலம் அடைந்துள்ளனர். இந்திய எதார்த்த நாடகம் நன்றாக வேரூன்றிவிட்டது; மேன்மேலும் செழித்துக் கொண்டிருக்கிறது. நவீன இந்திய தேசிய நாடகங்கள் அழகும் பயனும் நிறைந்தவை. அவற்றின் வளர்ச்சியில் இந்திய மக்கள் மட்டுமல்லாது, சோவியத் மக்களும் மகிழ்ச்சியுறுகின்றனர்.

— —

[ 2-ம் பக்கத்தொடர்ச்சி ]

மல்லிக் ராயல் விமானப் படையில் ஒரு கேடெட்டாகச் சேர்த்துக்கொள்ளப் பட்டார். ஒரு மாதத்திற்குப் பிறகு அவர் வென்டோம் என்னுமிடத்திற்கு அனுப்பப் பட்டார். அங்கே வெற்றிகரமாக பயிற்சி முடித்துவிட்டு 1917 ஜூன் 22-ம் தேதி 62-ம்நம்பர்அணியில் சேர்ந்தார். பிறகு அக்டோபர் மாதத்தில் ஃப்ரான்ஸுக்குச் சென்று 28-ம் நம்பர் அணியில்பணிபுரியத் துவங்கினார். விமானப் போரில் தமது முதலாவது அனுபவத்தை அவர் இவ்வாறு வர்ணிக்கிறார்; "எனது ஃப்ளைட் கமாண்டரான பார்க்கர் பறந்து கொண்டிருந்த விமானத்திற்குப் பக்கத்தில் நான் விமானத்தில் பறந்து கொண்டிருந்தேன். அவர் என்னைப் பார்த்து சிரித்துவிட்டு தமது கட்டைவிரலை பின்பக்கம் சுட்டிக் காண்பித்தார். நான் திரும்பிப் பார்த்தேன். ஆனால்எதுவும் தென்படவில்லை. சில விநாடிகளுக்குப் பிறகு ஒரு ஜெர்மன் போர் விமானம் பார்க்கரின் விமானத்தைத் தாக்குவதற்காக பின்பக்கத்திலிருந்து பாய்ந்துவந்ததைப் பார்த்தேன். நாங்களெல்லாம் பார்ப்பதற்கு முன்பாகவே பார்க்கர் இதைக் கண்டுவிட்டார். மின்னல் வேகத்தில் அவர் விமானத்தைத் திருப்பி பின்பக்கம் சென்று ஜெர்மன் விமானத்தைச் சுட்டு வீழ்த்தினார். அதே போர் அலுவலின்போது மிகவும் சிரமப்பட்டு நானும் ஒரு ஜெர்மன் விமானத்தைச் சுட்டு வீழ்த்தினேன்.

ஹர்தீத் சிங் மல்லிக் நார்மண்டியில் இருந்தார். முதலாவது உலகப்போரில் பணிபுரிந்த நாலு இந்தியர்களில் உயிர் பிழைத்தவர் இவர் ஒருவர்தான்.

இவ்வாறாக அந்தப் போரில் சேவைபுரிந்த இரண்டு இந்திய வீரர்களைப் பற்றி கூறிவிட்டோம். மற்ற ஒருவரைப்பற்றி சரியாக தகவல்கள் இல்லை. 1918-ம் நௌரோஜியின் சேவையைப்பற்றி வேறு எந்தத் தகவலும் இல்லை. 1918 அக்டோபர் 9-ம் தேதி டைம்ஸ் ஆஃப் இந்தியா பத்திரிகையில், வெலிங்கர் என்றும் இந்தியர் உயிர் இழந்தது பற்றி செய்தி வெளிவந்திருந்தது.

இந்திய விமானப்படை உருவாவதற்கு அடிப்படை வகுத்தவர்கள் இந்த வீர விமானிகள்தான் என்றால் சற்றும் மிகையாகாது.

---

**வலங்கிமான் டி. மு. கோ.**

O. S. No. 191/51

திருநரையூர், ஸ்ரீ ராமநாதஸ்வாமி தேவஸ்தானம் Respresanted by its டிரஸ்டி K.S.காயாரோகனம் பிள்ளை —வாதி.

கும்பகோணம் தாலுக்கா திருநரையூர் அய்யனார் கோவில் தெற்கு சந்து தெருவிலிருக்கும் திருவேங்கிடமேஸ்திரி குமாரர் மாரியப்பன் -- 3-ம் பிரதிவாதி.

ஷை 3-ம் பிரதிவாதிக்கு தெரிவிப்பதாவது இந்த நெம்பர் டிக்ரிபடி வரவேண்டிய தொகைக்கு டிகிரிஷாத்துபடி நிறவேற்ற மனுக் கொடுக்கப்பட்டு நோட்டீஸ் போனதில் சர்வாகாததால் ஒட்டி சர்வு செய்யவும் பப்ளிகேஷனுக்கும் உத்திரவாகி 17-4-67ல் ஈராங்கி போடப்பட்டிருக்கிற விபரம் அறிவிக்கப்படுகிறது.

R. திருவேங்கடாச்சாரி
2/7414/10 அட்வகேட்.

---

**வலங்கிமான் டி. மு. கோர்ட்டில் நாகப்பட்டிணம் டி. மு. கோர்ட்டின்**

E. A. 160/67 E. P. 801/66
S. C. 117/54

நாகப்பட்டிணம் டி. மு. இலாகா நன்னிலம் தாலுக்கா கயத்தூர் கிருமத்திலிருக்கும் K. சுப்பிரமணிய அய்யர் குமாரர் வீராச்சாமி அய்யர் — வாதி.

தற்காலம் வலங்கிமான் டி. மு. கோர்ட்டு இலாகா கும்பகோணம் தாலுக்கா திருமங்கலக்குடி P. O. 44சூர்யமூலை வட்டம்காரிப்பிரியன் குறிச்சி கிருமத்திலிருக்கும் கயத்தூர் பாவாடை படையாச்சி குமாரர் பண்ணீர் செல்வம் — பிரதிவாதி.

ஷை வாதியால் ஷை நெம்பர் பிரதிபேரில் பெற்றிருக்கும் டிக்கிரியை நிறைவேற்றி வாரண்டில் பிடித்து வசூலிக்க நிறைவேற்ற மனு தாக்கல் செய்து 20—4—67 தேதி வாயிதா போடப்பட்டிருப்பதால் அன்று கோர்ட்டில் ஆஜராகி கக்ஷியை தெரிவிக்கத் தவறினால் Expartyயாக உத்திரவு வாங்கப்படும் என்பதை அறிவிக்கப்படுகிறது.

L. கல்யாணசுந்தரம்
/7413/9 அட்வகேட்.

---

[ 3-ம் பக்கத் தொடர்ச்சி ]

அரசும் இந்திய மக்களும் வெகுவாகப் பாராட்டினர்.

பரஸ்பர நலன்களின் அடிப்படையில், கடந்த 12 ஆண்டுகளாக, பொருளாதார-தொழில் நட்புத்துறையில் இந்தியாவும் சோவியத் யூனியனும் ஒத்துழைத்து வருகின்றன. சோவியத் உதவியுடனும், 68 மாபெரும் தொழில் விவசாயத் திட்டங்களை இந்தியா கட்டியுள்ளது. இவற்றின் நிர்மாணத்தில், பல்லாயிரக் கணக்கான இந்திய ஊழியர்களும், தொழில் நிபுணர்களும், தொழிலாளர்களும் மிகச் சிறந்த தொழில் நுட்ப-உற்பத்தி அநுபவத்தைப் பெற்றுள்ளனர்.

கடந்த இருபது ஆண்டுக் காலத்தில் சோவியத்-இந்திய வணிகம் பன்மடங்கு பெருகியுள்ளது. இதன் விளைவாகச் சோவியத் யூனியன் இந்தியாவின் மிகச் சிறந்த வணிகக் கூட்டாளிகளில் ஒருவராகவும், வளரும் நாடுகளிடையே இந்தியாதான் சோவியத் யூனியனின் பெரிய கூட்டாளியாகவும் உள்ளனர்.

1959-ல் இந்தியாவுக்கு வந்த சோவியத் தூதுக்குழுவிடம் ஜவாஹர்லால் நேரு இவ்வாறு கூறினார்: 'இந்திய நாட்டுக்கும் மக்களுக்கும், சோவியத் நாட்டுக்கும் மக்களுக்குமிடையேயுள்ள நட்புறவு, ஆதாய அடிப்படையில் எழுந்ததல்ல; இந்திய சோவியத் நட்புறவு காலப் போக்கில் எழும் கருத்து வேற்றுமைகளையும் கடந்தது என்றும் எங்கள் நாட்டுக்கு மிக நன்மையானது என்றும் நிச்சயமாக நம்புகிறேன். இது உங்கள் நாட்டுக்கும் உலக முழுமைக்கும் நன்மை பயக்கும் என்று நம்புகிறேன்'.

கடந்த இருபது ஆண்டுகளாகத் தழைத்தோங்கி வரும் ராஜதந்திர உறவுகள் நமது நட்புறவும் நல்லிணக்கமும் நன்கு வளரும் என்பதற்குச் சான்றாகும்.

# உலகின் உணவுக் கவலை

உலக மக்களுக்கு உணவூட்டப் போதிய உணவு உற்பத்தி செய்தாக வேண்டும். மேலும் அதிகரித்து வரும் இந்தக் கவலை, அநேகமாக ஒவ்வொரு நாட்டிலும் நாள் தவறாமல் தெரிவிக்கப்பட்டு வருகிறது.

வளரும் நாடுகள் சில, பஞ்சத்தின் கோரப் பிடியிலிருந்து தப்புவிக்கப் படலாம். அதற்கு அந்த நாடுகள் தமது சொந்த உணவு சப்ளையை அதிகரிக்கக் கடுமையாகவும், விசேஷத்துடனும் உழைக்க வேண்டும். அத்துடன் வேளாண்மையில் முன்னணியில் இருக்கும் நாடுகளும் தம் உணவு உற்பத்தியைப் பெருக்கி, மேலே குறிப்பிட்ட வளரும் நாடுகளுக்குக் கை கொடுக்கவேண்டும்.

இந்தக் கூட்டு முயற்சிகள் கூட, மக்கள் தொகைப் பெருக்கம் இப்பொழுது இருக்கும் விகிதத்திலேயே போய்க் கொண்டிருந்தால், பற்றவே பற்றாது. 35 ஆண்டுகளில் உலக மக்கள் தொகை இரட்டிப்பாகிறது. இதுதான் மக்கள் தொகைப் பெருக்க விகிதம்.

உலகின் உணவுக் கவலை எவ்வளவு பரவலாக இருக்கிறது என்பதை பத்திரிகைகள், சஞ்சிகைகள் வாயிலாக அறியலாம்.

எடுத்துக் காட்டாக 'டைம்' பத்திரிகையை எடுத்துக் கொள்வோம். அட்டையில் மிகப் பிரபலமான பிரமுகரின் படத்தைப் போடுவதுதான் அதன் வழக்கம். ஆனால் ஏப்ரல் 7-ம் தேதி இதழ் அட்டையில் வண்ண வண்ண கருத்தடை மாத்திரைகளை பூச்செண்டு வடிவில் அமைத்துப் படம் போட்டிருக்கிறது. பூச்செண்டு என்பது விஞ்ஞான முறையில் 'பண்ணை' குறிக்கிறது.

'டைம்' பத்திரிகையின் படி கருத்தரிக்கும் வயதுடைய 3 கோடி 90 லட்சம் அமெரிக்கப் பெண்களில் 57 லட்சம்பேர் இந்த மாத்திரைகளை உபயோகிக்கின்றனர். பிற நாடுகளில் 50 லட்சம் பேர் பயன்படுத்துகின்றனர்.

'டைம்' பத்திரிகையின் 'மாத்திரை' கட்டுரை வந்த அதே வாரத்தில்தான், ஜனவரியில் அமெரிக்காவில் 2,95,000 குழந்தைகள் பிறந்தன என்று சுகாதார நிலையம் அறிவித்தது. 10,000 பேருக்கு 182 ஆக இருந்தது. நேர் மாறாக வளர்ச்சிபெறும் நாடுகள் சிலவற்றில் பிறப்பு விகிதம் 1000-க்கு 45 வரைகூட இருக்கிறது.

தென் அமெரிக்காவில் சிலியில் ஸாண்டியாகோ நகரில் ஏப்ரல் 9-ம்தேதி முதல் 15-ம் தேதிவரை நடக்கவிருக்கும் அனைத்துலகக் குடும்பக்கட்டுப்பாட்டுத் திட்ட நிலையத்தின் கூட்டத்திலும், டோக்யோவில் இப்பொழுது நடக்கும் ஆசிய கீழ்க்கோடி நாடுகளுக்கான பொருளாதாரக் குழுவின் கூட்டத்திலும் இவ்விஷயம் விவாதிக்கப்படும். இவ்வாரத்தில் இன்னொரு நிகழ்ச்சி என்னவென்றால், ஒரு ஆராய்ச்சிக்கு 20 லட்சம் லாடர் அமெரிக்கா வழங்கியிருப்பதாக அறிவித்திருப்பதாகும். எலிகள் வௌவால்கள், நச்சுப்பறவைகள் ஆகியவற்றிலிருந்து உணவுப் பொருள்களைக் காப்பாற்றுவதுபற்றிய ஆராய்ச்சி இது. இதற்கும், மேலே கூறப்பட்ட விஷயங்களுக்கும் பொருத்தம் இல்லாமல் தோன்றினாலும், சில நாடுகளில் அறுவடையான தானியத்தின் பாதியை இந்தப் பிராணிகள் அழித்து வருகின்றன என்று கூறினால் தொடர்பு தெளிவாகிறது.

எஃப். ஏ. ஓ. என்ற ஐ நா. உணவு வேளாண்மை நிலையம் அண்மையில் அறிவித்ததாவது: உணவுப் பற்றுக் குறையாக இருக்கும் இந்தியாவில், உற்பத்தியாகும் உணவில் பாதி எலிகளாலும் பூச்சிகளாலும் பறவைகளாலும் அழிக்கப்படுகிறது. இந்திய அரசாங்கமே இந்தத் தகவலை எஃப்.ஏ.ஓ. கீழ்க்கோடி மாநாட்டில் தெரிவித்தது. திட்டமிடுதல், தொழில், உழைப்பு உதவி எல்லாம் சேர்ந்து, வரும் ஆண்டுகளில் பஞ்சத்தைத் தடுக்குமா என்பது வரும் ஆண்டுகள்தான் முடிவு செய்யும். நமது தலைமுறையின் திகைக்க வைக்கும் மாபெரும் பிரச்னை இது'

——

# காங்கிரஸ் தலைவருக்குக் கடிதம்

அன்புடையீர்,

வந்தனம்.

சமீப சர்க்கார் தேர்தல்களில் காங்கிரஸ் தோல்விக்குரிய பல காரணங்களைச் சொல்வதைவிட 1959ல் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி காங்கிரஸ் கோட்பாட்டில் (Truth & Nonviolence) உண்மையும், சகோதர அன்பும் நீக்கப்பட்டதன் விளைவுகளே என்பது என்போன்றோர் அபிப்ராயம். காங்கிரஸுக்கு ஏற்பட்ட செல்வாக்கு காந்தியடிகளால் என்பதுடன், காந்தியடிகளுக்கு உலகில் ஏற்பட்ட புகழ் அவர் கடைபிடித்த அறநெறிப் பண்புகளேயாகும். தேர்தல்களில் வெற்றியடைவதற்கு சில உண்மைகளை தியாகம் செய்ய வேண்டியிருக்கிறது என்பது அரசியல் துறையில் ஒருவகைக்கு ஏற்கப்படின் அதன் விளைவுகள் நிச்சயமற்றதாயிருக்கும். ஆனால் அறநெறியை, உண்மையை கடைபிடிக்கும் எந்த இயக்கத்திற்கும் தோல்வி கிடையாது. தேர்தல்களில் ஜெயிப்பதற்கு, வேறு கட்சிகளுக்கும் காங்கிரஸ் ஸ்தாபனத்திற்கும் வித்தியாசமிருக்க முடியாது.

எனவே இனி காங்கிரஸ் கோட்பாட்டில் நீக்கப்பட்ட உண்மைகளையும் சகோதர அன்பும் (Truth & Nonviolence) சேர்ப்பதற்கு முயற்சிக்கவேண்டும் சர்க்கார் நடத்துவதற்கு உண்மை, அகிம்சையை, கடைப்பிடிக்க முடியாவிட்டால் சர்க்கார் நடத்த விரும்புகிறவர்கள் தனியாக காங்கிரஸ் கட்சி அமைத்துக் கொள்வதுதான் நல்லது. காங்கிரஸ் ஸ்தாபனம் உலகிற்கு ஒரு எடுத்துக் காட்டாக நீண்டகாலம் சேவை செய்ய வேண்டின் அறநெறிகளைப் புறக்கணிக்கக்கூடாது. நீதி இரண்டு விதம் - ஒன்று தனித்த அரசியல் நீதி, மற்றது அறநெறியுடன் கூடிய காந்தியடிகளின் அரசியல் தர்மம்.

இதுபற்றி யோசிக்கவே இதை எழுதுகிறேன். மன்னிக்கவும்.

அன்புள்ள,

ப. சங்கிலியாபிள்ளை.

Edited and Published by its owner Sri. Triloka Sitaram & Printed by him at his Shivaji News Printers, 2-A, Fort Station Road, Tiruchy-2
Annual Subscription Including 4 special numbers Rs. 10.